# ஆணவமலம்.

## "இத்தை விளைத்தன் மலம்."

என்று கூறியருளினார் மனவாசங் கடந்தார். அதுமட்டோ?

"எண்ணரிதாய் நித்தமாயிருண் மலத்தினழுந்தி
யிருவினையின்றன்மைகளுக் கீடானயாக்கை
அண்ணலருளா னண்ணியவை யவரா
யதனாலலகினிகழ் போகங்களருந்து மாற்றாற்
புண்ணியபாவம் புரிந்து போக்கு வரவுடைத்தாய்ப்
புணருமிருண் மலபாகம் பொருந்தியக்கா லருளா
லுண்ணிலவுமொளியதனா லிருளகற்றிப் பாசமுற்றிடுநற்
பசுவர்க்கம் எனவுரைப்பருணர்ந்தே."

என்று அளவில்லாத ஆன்மாவர்க்கம் அனைத்தும் முத்தியடைந்திடும் என்று உமாபதி சிவம் கூறியருளியதும் இவ்வுண்மையைப் புலப்படுத்துமாம். இக்கருத்தை, இந்தத் திருவிருத்தத்தின் கருப்பொருளாகக் காவையம்பலத்தம்பிரான் அருளிச் செய்த

"எண்ணிலா வுயிர்கள் இறந்து பிறந்தொருகால்
நண்ணிடு மானடி யருளா" லென்றது.
என்னுங் குறட்பா ஐயந்திரிபறக் காட்டுமாம்.
இன்னமும் " பெத்தான்மாவை நணுகி நிற்குமாதலானாசமு மின்றாமே"

என்று கூறியருளிய அருணந்தி சிவந்தானே

"எல்லாமாய்த்தத்துவங் களியைந்ததெண்ணுவுக்குன்னிற்
சொல்லாய்கன்மமெலாம் துய்ப்பித்துத்துடைத்தற்கும்பின்
னில்லாமைமுற்றுவித்து நீக்கவுங்கூடிநின்ற
பொல்லாதவாணவத்தைப் போக்கவும்புகுந்தவன்றே."

எனத் திருவாய் மலர்ந்தருளுமுகத்தால் ஆன்மாக்கள் எல்லாம் ஒருகாலத்து முத்திசேர்ந் தொழியும் என்பதே அருணந்தி சிவத்தின் திருவுள்ளக் கருத்துமாமென்பது தெற்றெனத் அணி யப்படும்.

ஆகவே மலம் கெடுமாறின்றி முத்தான்மாக்களை விட்டு நீங்கும் என்பதே சித்தாந்தம் என்பது கண்டு கொள்க.

## மாயை ஆணவம் அல்ல.

ஆணவம் என்பதோர் மலம் உண்டெனக் கொள்ள வேண்டிய தெற்றுக்கு? மாயையே எமது அறிவை மறைத்து நிற்கும் எனின், மாயை ஆன்மாக்களின் அறிவைச் சிறிது விளக்கு தலானும், அங்ஙனம் விளக்காவழி ஆன்மா மூடத்துவம் படைத்துக் கிடத்தலானும், அந்த மூடத்துவத்துக்கு ஏதுமாயையின் வேறாகிய ஆணவமாம் என்பது செவ்விதிற் போ தருமென்க. அன்றியும் நுணித்து நோக்குமிடத்து மாயை. புறப்பந்தமும் ஆணவம் அகப்பந்தமும் போல ஆன்மாக்சளைப்பந்தித்து நிற்றல் நன்கு புலப்படும். மாயை தன்னிடத்துத் தோன்றிய மாயேயங்களால் ஆன்மாவைப் பிணித்தவழி, அதன் அறிவைச் சிறிது விளக்கி, அங்ஙனம் விளங்கிய அறிவின் கண்ணே அவ்வான்மாவின் மோகாதி குணங்களுக்கு விடயமாய் நிற்றலும்; ஆணவம் ஆன்மாவின் அறிவை மறைத்து, அது மாயேயங்களால் விளங்குமிடத்து அதனை மாயாவிலாசங்களின் மயக்குதலும் உண்மையால், ஆணவம் சூக்குடபந்தமும் மாயை தூல பந்தமும்போல, ஒன்று உள்ளும் மற்றையது புறத்தும் ஆன்மாவைப் பந்தித்து நிற்கும் என்பது காண்க.

## ஆணவத்தை நீக்குவது அருள்.

ஆணவ மலமாகிய இருள், இறைவன் அருளாகிய ஒளி வீசத்தன் வலி குன்றி அடங்கும். அவ்வருளுக்கு இவ்விருளை ஒரே முறையிற்றானே நீக்கும் ஆற்றல் இன்றாங் கொல்லோ எனின் கடவுளுடைய வரம்பிலாற்றலாகிய திருவருட்குணத்தை உள்ளபடி விளங்கினால் இவ்வாசங்கை நிகழாது. கடவுள் வரம்பிலாற்றல் உடையர் என்பதனால் அவ்வாற்றல், நிகழ்ச்சி யமைதல் கூடாத அசம்பாவிதங்களையும் செய்து முடிக்கவல்லது என்பது போதராது. கடவுளுடைய வரம்பிலாற்றல் ஒன்றைச் சூனியமாக்க மாட்டுமோ? இரண்டு சமரேகைகொண்டு ஒரு முக்கோணத்தை அமைக்க மாட்டுமோ? கடவுளது வரம்பிலாற்றல் நிகழுந்தகுதியுடைய செயல்களிலன்றி அத்தகுதி யில்லாத அசம்பாவிதங்களிற் சென்று தொழிற்படு மென்றல் அபத்தமா மென்க. இயலுந்தகு தியில்லா தன இல்பொருளாய் " எல்லாம் " என்னும் சொற் பொருளில் அடங்கிய உள்பொருள்களுள் ஒன்றாக மாட்டாது. ஆகவே கடவுள் “ எல்லாம் வல்லார்" என்னுமிடத்து அவ்வன்மை இப்பொருள்களாகிய அசம்பாவிதங்களிலும் சென்று தொழிற்படுமென வாதித்தல் நியாயநெறிக்குச் சிறிதும் அடாதென்பது காண்க. மலநீக்கம் அருட்டரிசனத்தாலன்றி அமையாதாதலின் அவ்வருட்டரிசனம் சித்திக்கப் பெறாதார்க்கு மலத்தை போக்குதல் கடவுளும் செய்யத்தக்க தொன்றன்றாம். இவ்வருட்டரிசனம் அவ்வவர் பக்குவத்தளவாகவே சித்திக்கு மாதலால், அப்பக்குவத்தை ஒட்டிக் கடவுள் ஆன்மாக்கட்குத் திருவருளைத்தரிசிப்பித்து, அதுவாயிலாக அவர்களது ஞான திருட்டியைப் படிமுறையாக விளக்கித், தமது திவ்விய பரம் சொரூபநிலையை உள்ளவாறு காட்டியருளுவர். இதனைக்காணவே ஆன்மாக்களது மலபந்தமும் விண்டொழியு மென்க.

# ஆணவமலம்

இவ்வாண பந்தத்தைக் குறித்த உண்மைத்துணிவுகள் எல்லாம் குருமுகமாக அறியற்பாலனவன்றி எமது சிற்றறிவாற்றல் கொண்டு அளக்கத்தக்கன வல்ல. அங்கனம் அளக்கத்துணிவது பராயமாதன் முன் பழுத்த பழத்தை நிகர்க்கு மென்க.

யாழ்ப்பாணம் - சபாரத்தின முதலியார்.

சித்தாந்தம் - 1913 ஸூ - ஆகஸ்ட் மீ